13th September 1958]

SRI. M. KALYANASUNDARAM : மேகங்கள் திரளக்கூடிய இடங்களில், அவை மழையாகப் பெய்யக்கூடிய நேரத்தில், பெய்யக்கூடிய அளவிற்கு மழை பெய்யச் செய்வது தான் இந்த முறை என்பது வாஸ்தவம். ஆனால், நீலகிரி மலையில் மட்டும் தான் மேகங்கள் திரளக்கூடுமா ? சேலத்திலுள்ள சேர்வராயன் மலையில் வருடத்தில் 4–5 மாதங்களில் மேகங்கள் திரண்டுவிட்டு மறைகின்றன. அங்கே இந்தப் பரிசோதனைகளை நடத்த வேண்டுமென்று அக் கமிட்டி கூறியிருக்கிறதா ? அங்கே பரிசோதனைகள் நடத்தப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நம் மாநிலத்தில் பல இடங்களில் மலைகள் இருக்கின்றன. அங்கே மேகங்களும் கூடுகின்றன. ஆனால் ஏதாவது ஒரு இடத்தில் தான் பரிசோதனைகளை நடத்த விரும்புகிறோம். மேலும் கோயம்புத்தூரில் வாநிலை அறிவிப்பு அலுவலகம் (மெடியரலாஜிஸ்ட் அலுவலகம்) இருக்கிறது. இப்போது பரிசோதனைகள் தான் நடத்தப்படுகின்றன. பரிசோதனைகளின் முடிவுகள் தெரிந்த பிறகு மற்ற பிரதேசங்களிலும் இந்த முறையைக் கையாளலாம்.

### *Irrigation*

* 187 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே விசேஷ நீர்ப்பாசன திட்டங்களுக்கென 1958–59-ம் ஆண்டுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

(ஆ) இத் தொகை மூலமாக தாலூகாவாரியாக என்னென்ன திட்டங்கள் நிறைவேற்றப்படும் ?

THE HON SRI M. BHAKTAVATSALAM : (*a*) Rs. 1,02,500.

(*b*)

| Taluk. (1) | Name of schemes. (2) |
|---|---|
| Palladam .. .. .. | (1) Restoration of Kannanpalayam tank. |
| Gobichettipalayam .. | (2) Extension of ayacut under sluice No. 428 of Thadapalle channel. |
| Pollachi .. .. .. | (3) Providing irrigation facilities to the lands on the left side of Aliyar river. |

SRI P. G. MANICKAM : விசேஷ சிறு பாசனத் திட்டங்களுக்காக இந்திய சர்க்கார் ராஜ்ய சர்க்காருக்கு போதிய பணம் கொடுக்கத் திட்டமிட்டுக்கொண்டிருக்கிறது. ஆகவே, கோயம்புத்தூர் ஜில்லாவில் என்னென்ன சிறு பாசனத் திட்டங்களை நிறைவேற்றமுடியுமோ அவைகளையெல்லாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்ப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த விஷயம் இப்போது தீவிரமாகக் கவனிக்கப்பட்டுத் தான் வருகிறது.

### *Bone digesters*

* 193 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சூப்பர்பாஸ்பேட், போன்மில் போன்ற தானிய விளைவை அதிகரிக்கக்கூடிய உரத்தை உற்பத்தி செய்யக்கூடிய போன் டைஜெஸ்டர்கள் (bone digesters) இந்த மாகாணத்தில் இருக்கிறதா ? அப்படியானால், அவைகள் எங்கிருக்கின்றன ?

[13th September 1958

(ஆ) இல்லையானால், அவற்றை கிராமங்களில் அமைக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes. There are two such factories, one at Tudiyalur and the other at Ranipet.

(*b*) A scheme for distribution of bone digesters in a few selected areas is under the consideration of the Government.

SRI A. VEDARATHNAM : நாம் உணவு தானிய விளைச்சலை அதிகரிக்க வேண்டியிருக்கிறது. உணவு தானியப் பயிர்களுக்கு எலும்பு உரத்தைத் தவிர வேறு சிறந்த உரம் கிடையாது. அத்தகைய எலும்புகள் வீணாக்கப் படாமலும் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படாமலும் பார்த்துக்கொண்டு, அவைகளை உரமாகப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். அவைகளை உரமாக்குவதற்கு "போன் டைஜெஸ்டர்கள்" மிகவும் பயன்படுவதால், அவைகளை ஒவ்வொரு ப்ளாக்கிலும் கொண்டுவர அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது, காதி, கிராமக் கைத்தொழில்கள் கமிஷனின் ஆதரவில் ஐந்து நிலையங்கள் அமைக்கப் படுகின்றன. எலும்பு கிடைப்பது அரிதாக இருக்கிறது. இப்போது நாம் எலும்பிற்கு வடநாட்டை எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. அங்கேயிருந்து நமக்குப் போதிய எலும்பு கிடைக்கவில்லை. போதிய எலும்பு பெறுவதில் தான் இப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI K. R. NALLASIVAM : இப்போது, சமுதாய அபிவிருத்தித் திட்டப் பிரதேசங்களில் பல இடங்களில், எலும்பைத் தூளாக்கும் இயந்திரம் வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால், பல இடங்களில், அவை நிறுவப்பட்டுப் பல மாதங்களாகியும் வேலை துவங்கவில்லை. அதற்குக் காரணம் என்ன ? அந்த இடங்களில் உடனடியாக வேலையை ஆரம்பிக்க சர்க்காரால் நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போடலாம். இல்லாவிட்டால், இந்த விஷயத்தை கனம் அங்கத்தினர் விவரமாகத் தெரிவித்தால், ஆவன செய்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : எலும்பு உரம் விவசாயத்திற்கு மிகவும் அவசியம் என்று சொல்லப்படுகிறது. வட ஆற்காடு ஜில்லாவில் காட்பாடியில் பல ஆண்டுகளாக எலும்பு உரம் உற்பத்தி செய்துவந்த ஒரு தொழிற்சாலை இப்போது மூடப்பட்டிருக்கிறது. அது மூடப்பட்டதற்குக் காரணம் என்ன ? உடனடியாக, அதைத் திறக்கச் செய்வதற்கான நட வடிக்கையை சர்க்கார் எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது சம்பந்தமாக சர்க்காரிடம் தகவல் இல்லை. வட ஆற்காடு ஜில்லாவில், ராணிப்பேட்டையில் பாரி அண்டு கம்பெனியானது ஸல்ப்யூரிக் அமிலத்தைச் சேர்த்து ஸூபர் பாஸ்பேட் என்ற எலும்பு உரத்தை உற்பத்தி செய்து வருகிறது. மற்ற விஷயங்களுக்கு கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்கிறேன்.

SRI A. GOVINDASAMY : வட நாட்டிலிருந்துதான் எலும்பு அதிகமாக வருவதாகச் சொன்னார்கள். வட நாடுகளில்தான் அதிகமாக பசுக்கள் கொல்லப்படுவதால் அங்கு அதிகமாக எலும்பு கிடைக்கிறது. நமக்கு எலும்புகூடக் கொடுக்க வட நாட்டு சர்க்கார் தயங்குகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சர்க்காரிடம் எலும்பில்லை. எலும்பு அங்கே கிடைக்கிறது. இங்கே அதைச் சேர்க்கக் கூட அக்கறையில்லை.